It is proposed to set up during the current year a Sales-*cum*-Procurement Depot at Coimbatore to provide marketing facilities for handicrafts goods.

*Sathiamangalam-Chamrajnagar Railway Line.*

* 282 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மத்திய கவர்ன்மெண்டாருடைய 1957–58–ம் வருஷத்திய சர்வே திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்த சத்தியமங்கலம்-சாம்ராஜ்நகர் புது ரயில்வே லைன் சர்வே எடுக்கப்பட்டாகிவிட்டதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : As this railway line has not been included by the Government of India in the Second Five-Year Plan, the survey of the line has not been taken up.

SRI P. G. MANICKAM : இதற்கு முன்பு ஒரு தடவை இதே லைன் சர்வே செய்யப்பட்டிருக்கிறது. மறுபடியும் 1957–58-ல் சர்வே செய்யப்படும் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது என்பது எனது ஞாபகத்தில் இருக்கிறது. பழங்காலம் முதற்கொண்டே இதைப்பற்றி சர்வே செய்யப்பட்டு வருகிறது. இது சுமார் பத்து அல்லது இருபது வருஷங்களாகவே பரிசீலனையில் இருந்து வருகிறது. கவர்னர் அவர்கள் அங்கு வந்தபோது கூட இதைப்பற்றி அவரிடம் தெரிவிக்கப்பட்டது. அப்பொழுது அவர்கூட இதை எடுத்துக்கொள்வதற்கு பிரயாசை எடுத்துக்கொள்ளப்படும் என்றும் தெரிவித்திருக்கிறார். ஆகவே இந்த திட்டத்தை உடனடியாக எடுத்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ளும்படி நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு சிபாரிசு செய்யுமா என்பதைத் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சர்வே எடுப்பது என்பது பெரிய விஷயம் அல்ல. முன்பு இதைப்பற்றி சர்வே செய்யப்பட்டிருந்தாலும் மேற்கொண்டு சர்வே செய்யும்படியாகவும் இருக்கிறது. அதை விட முக்கியமான திட்டங்கள் இப்பொழுது அரசாங்கத்தினிடம் இருக்கின்றன. அவைகளைப்பற்றி இந்த அரசாங்கம் வற்புறுத்திக்கொண்டிருக்கிறது. இதற்கு பத்தாவது இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது இப்பொழுது எடுத்துக்கொள்ளப்படும் என்பதை எதிர் பார்ப்பதற்கு இல்லை.

*Key Village Centres.*

* 283 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 11–7–57 அன்று 86-ம் நெம்பர் கேள்விக்கு அளித்த பதிலின்படி இப்போது ஆரம்பித்திருக்கும் கேந்திர கிராமத் திட்டம் எந்தெந்த இடத்தில் இருக்கின்றது என்ற விபரத்தை தெரிவிக்கும் அறிக்கை சபையின் முன்னிலையில் வைக்கப்படுமா ?

(ஆ) மேற்படி திட்டம் ஏற்படுத்தவேண்டுமென்று கோரி எதேனும் விண்ணப்பங்கள் வந்திருக்கின்றனவா ?

(இ) அப்படியானால், அவற்றின் பேரில் என்ன முடிவு செய்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) A statement[a] is placed on the table of the House.

(*b*) & (*c*) Yes. During 1957–58, three petitions were received by Government. The requests contained therein were examined and suitable replies were given to the petitioners.

---

[a] Printed as Appendix I on pages 218–220 infra.

18th September 1958]

SRI A. A. RASHEED : Sir, from the statement placed on the table of the House, it is seen that no key village centre has been opened in North Arcot. What is the reason, Sir?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not know, Sir, but I may tell the hon. Member that North Arcot has not been discriminated against.

SRI A. VEDARATHNAM : கேந்தர கிராம திட்டத்தில் என்னென்ன கைத்தொழில் எங்கங்கே நடைபெறுகின்றன ? 284-வது கேள்வியிலுள்ளபடி தானிக்கோடகம் என்ற இடத்தில் நடைபெறுகிற செங்கல் உற்பத்தியை குறைந்த செலவில் உற்பத்தி செய்து அதை தேவையான இடங்களுக்குக் கொண்டு போய் விநியோகிப்பதற்கு இந்த அரசாங்கம் ஏதாவது முயற்சி எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : We are now in question No. 283. The hon. Member may put that question after question No. 283 is over. Does he want question No. 284 also to be answered?

SRI A. VEDARATHNAM : இந்த இரண்டு கேள்விகளுக்கும் கேட்கிறேன்.

MR. SPEAKER : We have taken up only Question No. 283 and not 284.

SRI A. VEDARATHNAM : கேந்தர கிராம திட்டத்தின் கீழ் என்னென்ன கைத்தொழில் எங்கங்கே நடைபெறுகின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது கால்நடை விஷயமான கேள்வி.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது சர்க்காரால் கொடுக்கப்பட்ட அறிக்கையிலிருந்து 24 இடங்களில் "கீ வில்லேஜ் சென்டர்" ஆரம்பித்திருப்பதாக தெரியவருகிறது. அவற்றில் கோவை மாவட்டத்தில் பதினேறு இடங்களில் ஏற்படுத்தப்பட்டிருப்பதாக தெரிகிறது. மற்ற இடங்களில் குறைவாக இருப்பதற்கு காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எந்தந்த பிராந்தியங்களில் கால்நடை வளர்ச்சிக்கு வசதி இருக்கிறதோ அந்தந்த இடங்களில் நிச்சயமாக கவனிக்கப்படும். நமது ராஜ்யத்தில் நல்ல மாடுகளை வளர்க்க வேண்டுமென்ற லட்சியத்தில் அந்தந்த இடங்களில் மாடுகள் வளர்க்கப் படுகின்றன.

SRI M. KALYANASUNDARAM : கால்நடை வளர்ச்சிக்கு கேந்தர கிராம திட்டங்கள் எந்த அடிப்படையில் பொறுக்கி எடுக்கப்படுகின்றன ? அப்படியானால் திருச்சி ஜில்லாவில் மணப்பாரை என்ற இடத்தில் நல்ல மாடுகள் இருக்கின்றன. திருச்சி ஜில்லாவில் அப்படிப்பட்ட இடங்களெல்லாம் எடுக்கப்பட்டிருக்கின்றனவா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது எடுக்கப்பட்டிருப்பது முடிவானது அல்ல. இதற்கு மேலும் விஸ்தரிக்கப்பட்டு வருகிறது. எந்தந்த ஜில்லாக்களில் குறைவாக இருக்கின்றனவோ அந்த இடங்களெல்லாம் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI R. SRINIVASA IYER : தஞ்சை ஜில்லாவில் கீ வில்லேஜ் சென்டர் ஆரம்பிக்க ஏதாவது திட்டம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி தனி கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.